40

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தியின்
வெளியீடு.

# பாத்ர தத்வஜய த்வஜம்

(ராமாநுஜதயாபாத்ரகல்பனையைப்பற்றின அநேக
விஷயங்களை விசதமாக நிரூபிப்பது.)

**ஸ்ரீமான். வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார்
ஸ்வாமிகளுக்கு ஸங்க்ரஹமான
விடையளிப்பு.**

பெருமாள் கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றியவை.

காஞ்சீபுரம் காமகோடி பிரஸ்.

பஹுதான்யஸூ ஆவணிமாதப்பிறப்பு.

1938.

இதன் விலை அணா 0—3—0

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகாய நம:.

# ாத்ர தத்வ விஜய த்வஜம்.

காஞ்சி. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.



வா த்ர தத்வ விஜய த்வஜ நாமா

ஸூநோதி வாதி ஹம்ஸாம்பு வாஹ ஸூநு |

ஸாதுவிகாத வாதி ஹ்ருஷ்டி ப்ரயோஜன

ஸத்வ தத்வ ஜ்ஞாநஸ்யைத ||

## ராமாநுஜ தயாபாத்ரமும் ஓலைப்புத்தகங்களும். *

அடியேன் வெளியிட்டுள்ள ராமாநுஜ தயாபாத்ர தத்வக்ரந்தத் ல் ஓலை ஸ்ரீகோசப்ரஸ்தாவம் வலிதாகச்செய்திருப்பதை யாவரும் றிவர். அதில் (பக்கம் 219ல்) இந்த ப்ரஸ்தாவத்தை முடிக்கு டத்தில் "தேசிகனுடைய தமிழ்க்ரந்தங்களான ஓலை ஸ்ரீகோசங் ள ஸ்ரீமாந்வேங்கட தனியனே உள்ளனவாகவும் பாத்ர தனிய டைய ப்ரஸங்கிமமும் அற்றனவாகவும் நாம் ஸாதம் ட்டுவோம்; இதை மறுக்கமுடியாதே. இதனால் ஏற்படுகிற ண்மையை யார் அபலபிக்ககிற்பார்?" என்றெழுதி முடித்திருக்கி றன். இந்த வாக்யங்களின் கருத்தை வியாக்கியானித்துப் பல ல நுட்பங்களைத்தெரிவிக்க இந்த விஜய த்வஜம் வெளிவருகின்றது.

சிலவருஷங்களுக்குமுன் நெல்லூர் ஜில்லாவில் ஒரு ஊரில் ஒரு த்வைதிவித்வான் (சாஸ்த்ரி) தான் புதிதாக ஒரு க்ரந்தம் நிர்மா னம் செய்து பண்டிதஸபையில் அரங்கேற்றினர். பண்டிதர்கள் லரும் அதைச் செவிசாத்தி மிகவும் ஆனந்தித்து அந்த க்ரந்த ர்த்தாவைப்புகழ்ந்து பாராட்டினர்கள். அந்தக்ரந்தத்தை அச்சிட வேண்டியதென்றும் தீர்மானித்துப் பலர் பொருளுதவியும் புரி தார்கள். பிறகு அந்த க்ரந்தம் அச்சுக்கூடம் போய்ச் சேர் கள். வேலையும் நடந்து வந்தது.

வருஷம்

இந்த சாஸ்த்ரியிடத்தில் வெகுகாலமாகப் பகையும் பொறாமையும் கொண்டிருந்த மற்றொரு வித்வான் எப்படியும் இவரைப் பங்கப் படுத்த வேணுமென்றெண்ணி அந்த அச்சுக்கூடத்தலைவரை வசப் படுத்திக்கொண்டு அந்த க்ரந்தத்திலிருந்து ஒரு பிரதி விரைவாக எழுதிக்கொண்டுசென்று மூன்று நாளைக்குள் அதே ஆநுபூர்வியாய் நாலைந்து ஓலைப்புத்தகங்கள் ஸஜ்ஜப்படுத்தி, புதுமை தெரியாதபடி உபாயங்களினால் பழைமைப்படுத்தி, சில ஏடுகளில் செல்லரிப்பு, பூச்சிக்கடி முதலியவற்றையும் உண்டாக்கி, வெவ்வேறு ஊர்களி லிருந்து வெகு ப்ரயாஸப்பட்டு இவ்வோலையேடுகளைத்தாம் தருவித்த தாகவும் நிரூபித்து அதே ஊரில் ஒருவாரத்திற்குள் மறுபடியும் பண் டித ஸபைகூட்டி அந்தஸபையில் இந்த ஓலையேடுகளைக் காண்பித்து "இந்த சாஸ்த்ரி, ப்ராசீநக்ரந்தத்தைத் தாம் நிர்மாணம் செய்த தாகக் களவுமுறையில் காட்டிக்கொண்டாரத்தனை" என்று ஒவ் வொருவரும் உறுதியாய்ச் சொல்லும்படிசெய்து சாஸ்த்ரீயைப் பரிபவப்படுத்திவிட்டார்.

ஆனாலும் சாஸ்த்ரிகள் தம் உள்ளத்தில் உண்மை யுணர்ந்த வராதலால், மிக முயன்று எதிராளிசெய்த சூது வேலையை நாலு நாளைக்குள் கண்டுபிடித்து ருஜூப்படுத்திவிட்டார். பிறகு உண்மை உண்மையாகவே தேறிற்று.

இங்ஙனே பல விஷயங்கள் நமக்கு நன்கு தெரியுமாதலால் இதை நாம் ஏற்கனவே நெஞ்சிற்கொண்டே பிறருடைய சூதுகளு க்கு அவகாசம் ஏற்படாதபடி நம்முடைய விவக்ஷிதத்தை ஒழுங் காகவே வெளியிட்டு முடித்திருக்கிறோம்.

ராமாநுஜதயாபாத்ரமுள்ள ஒரு ஓலைப்புத்தகம் இருப்பதாகவும் அதைச் சிலர் சேகரித்து வருவதாகவும், இத்தனியன் ஜனித்து உண்மையில் 600 வருஷம் ஆகிறதென்பதை எளிதாகவே உலகம் நம்பும்படி செய்துவிடலாமென்று அவர்கள் பேசிக்கொண்டிருப் பதாகவும் நமது காதில் விழுகிறது. ஸூர்ய சந்திரர்களின் கதியை நிரோதம் செய்ய முடிந்தாலும் முடியலாம்; அடியேனுடைய நிரூ பணத்தை அணுவளவும் அசைக்க முடியாதென்பதை வற்புறுத்தியே விளப்புவேன். — ராமாநுஜாபாத்ரம் ஜனித்து 200 வருஷம் ...கிறது என்பதுதான் வர்ஷபூர்த்தமானாலும் ஸித்தாந்தமாகத்தேறி ...ம். இதில் எள்ளளவும் ஸந்தேஹப்பட வேண்டா. இன்னமும்

விசதமாகவே நிரூபித்து நிலைநாட்டுவேன். இந்த நிரூபணத்தில் நெகிழநிற்பேனாகில் இந்த பாத்திரோத்ஸவத்தை நானே முன்னின்று நடத்திவைக்கக் கடமைப்பட்டவனென்பதைப் பன்முறையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஓலை ஸ்ரீகோஶவிஷயத்தில் அடியேனுடைய வார்த்தை வெற்றிபெறுமா, பிறருடைய பொய் வெற்றி பெறுமா என்பதை ஒவ்வொருவரும் உள்ளபடி உணரலாமிப்போது.

ஓலையேடுகள் எழுதுகிறவழக்கம் இக்காலத்தில் அனேகமாய் இல்லை என்றே சொல்லலாம். நாம் நிரூபிக்கிறபடி உண்மையில் ராமானுஜதயாபாத்ரம் ஜனித்த காலத்தில் ஓலையேடுகள் எழுதிக் கொண்டிருந்தார்களென்பதில் ஸந்தேஹமில்லை. அக்காலத்தில் இந்த ராமானுஜதயாபாத்ரத்தை ஒருவரும் ஓலையேட்டில் எழுதி வைத்திருக்கவில்லையென்று ஒருவரால் சொல்லமுடியுமா? முடியவே முடியாது, பலபேர்கள் அதை எழுதிவைத்துக்கொண்டிருக்கவும் கூடும்; எழுதிவைத்துக்கொள்ளாமலிருக்கவும் கூடும். அதீந்த்ரியமான இவ்விஷயத்தில் யாரும் சோதிடம் சொல்லமுடியாது.

பிறருடைய ஸம்ப்ரதாயத்தில், ப்ரபந்தநிர்வாஹம் என்றும்' ப்ரபந்தாநுஸந்தானதீபிகை என்றும் சில சிறு சுவடிகளைக் கல்பனை செய்திருக்கிறார்கள்.

[கல்பனை செய்திருக்கிறார்கள் என்று நாம் எழுதுவதைப் பார்க்கும் போதே பிறர்க்கு ப்ரளயமான உத்வேகம் உண்டாகக்கூடும். இதற்கு நாம் என் செய்வது!. நாம் தெரிவிக்கிற உண்மைகளை ஒவ்வொன்றையும் பிறர் இசைந்தே தீரவேண்டும்படியான முறையிலன்றோ நாம் விஷயங்களை ருஜுப்படுத்துவது வழக்கம். உத்வேகம் கொண்டு பயனென்ன? நிரூபிக்கும்விஷயங்களிற் கண்செலுத்துக.]

அங்ஙனம் கல்பனை செய்யப்பட்ட சில சுவடிகள் ஜனித்த காலத்தில் அச்சுக்கூடங்களுக்கு அதிகப்ரசாரம் இல்லாமலிருந்தபடியால் அவை ஓலையேட்டில் ஏறியிருக்கலாம். அப்படிப்பட்ட சுவடிகளைப் பற்றியா நமக்கு விசாரம்? இதைப்பற்றின உண்மையை நாம் எப்படி நிரூபிக்கிறோமென்பதையே இப்போது விளக்குகிறோம்.

"ஸ்ரீமாந்வேங்கட தனியன்தான் முதலில் தேசிகனுக்கு இருந்தது" என்பதைப் பிறரும் நிர்விவாதமாக இசைந்திருக்கிறார்கள். அப்படியே எழுதியுமிருக்கிறார்கள். அதன்பிறகு பத்து வருஷம்

கழித்து ராமாநுஜதயாபாத்ரத்தனியன் பிறந்ததாகப் பலநூல்களில் எழுதியுள்ளார்கள். ஒருதனியன் இருக்க, அதுதானும் அப்போதே எங்கும் பரவியுமிருக்க, வேறொருதனியன் பத்து வருடங்களுக்கு அப்பால் எதற்காக ஸ்ருஷ்டிக்கப்படவேணும் என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்யவேண்டியது மிகவும் அவசியம். மருமம் முழுவதும் இங்கேதான் தங்கிநிற்கிறது.

த்ருதீயப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி பணித்ததாக ஒரு குருபரம்பராப்ரபாவம் வெகுநாளைக்குமுன் அச்சிட்டிருக்கிறார்கள். கலி௵ 4973 ப்ரஜோத்பத்தி வருஷத்தில் அச்சிட்ட பிரதி எங்கும் பரவியுள்ளது. இது வெளிவந்து 66 வருஷம் ஆகிறது. இதில் வேதாந்த தேசிகர்வைபவப்ரகரணத்தில் (பக்கம் 105ல்) ராமாநுஜ தயாபாத்ரம் பிறந்தவகைகள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. தேசிகன் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த ஒன்றான ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி, பகவத் விஷய க்ரந்தத்தை மாத்திரம் தேசிகனிடத்தில் அதிகரியாமல் அவருடைய திருக்குமாரரான நயினாராசார்யரிடத்தில் அதிகரிக்க விரும்பினதாகவும், அப்படி அதிகரிக்கத் தொடங்கும்போது ராமாநுஜதயாபாத்ரம் என்கிற இந்தத் தனியனை அவர் கவிபண்ணி அநுஸந்தித்து வந்ததாகவும், இதைச் சிலர் தேசிகரிடத்திலே போய்த் தெரிவித்ததாகவும், அவர் ஏற்கனவேயுள்ள ஸ்ரீமான் வேங்கடதனியனையும் இந்த நாதநபாத்ரத் தனியனையும் சீர்தூக்கிப் பார்த்து, இந்த பாத்திரத்தனியனே மிகவும் கொண்டாடத்தக்கது என்று அருளிச்செய்ததாகவும், பிறகு சிஷ்யர்கள் தேசிகரை வணங்கி 'நாங்கள் எந்தத்தனியனை அநுஸந்திக்கக்கடவோம்' என்று கேட்கையில் அப்போது தேசிகர் "ஸ்ரீமாந் வேங்கட தனியன் முன்னமே ச்ருதப்ரகாசிகாபட்டர் திருவுள்ளமுகந்து நியமித்திருக்கையாலே அதை விடுவதற்கில்லை; இந்த நாதநபாத்திரத்தனியன் எனக்கு உகப்பாயிருக்கையாலே இதையும் விடுவதற்கில்லை; ஆகவே ஒரு வ்யவஸ்தை பண்ணிவிடுகிறேன்; ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களை அதிகரிக்கும்போது ஸ்ரீமாந் வேங்கடதனியனை வைத்துக் கொள்ளுங்கோள்; பகவத் விஷயம் (ரஹஸ்யம்) முதலான த்ரமிடக்ரந்தங்களை அதிகரிக்கும்போது இந்த நாதநபாத்ரத்தனியனை வைத்துக்கொள்ளுங்கோள்" என்று விபாகம் செய்துகொடுத்ததாகவும், அதைக்கேட்டவுடனே சிஷ்யர்களும் மற்றுள்ள பெரியோர்களும் ஒக்கும் ஒக்கும் ஒக்கும்

என்று உகந்தருளினதாகவும், இவ்வளவும் திருநாராயணபுரத்தில் நடந்ததாகவும்;—

பிறகு பத்துவருடம் கடந்தபின்பு தேசிகர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினதாகவும், அங்கு விபக்ஷர்களால் த்ராவிட வேதபாராயணத்திற்கு உபரோதங்கள் பிரபலமாக ஏற்பட்டு அத்யயநோத்ஸவம் தடைபட்டுப்போனதாகவும், அந்த உபரோதங்களையெல்லாம் தேசிகரே வாதங்கள்செய்து போக்கியருளி அத்யயநோத்ஸவத்தைக் குறையற நடப்பித்ததாகவும் அப்போது நம்பெருமாள் திருவுள்ளமுகந்து இந்த நூதன பாத்ரத்தனியனையும் இதைச்சேர்ந்த வாழித்திருநாமம் முதலியவற்றையும் பக்தர்களின்விருப்பத்தின்படி ஸந்நிதிகளிலெங்கும் கோஷிக்குமாறு நியமித்து முந்துற முன்னம் தாம் [பெரிய பெருமாள்] அரையர்திருவாக்காலே திருச்செவிசாத்தி இவ்வண்ணமாகவே ஸகலதிவ்யதேசங்களிலும் ஸகல திருமாளிகைகளிலும் அநுஸந்திக்கும்படி கட்டளையிட்டதாகவும் அதில் எழுதப்பட்டுளது.

ஸ்ரீரங்கநாதனுடைய கட்டளை யென்று தெரிவிக்கப்பட்ட இவ்விஷயம் எவ்வளவு உண்மை என்பதை ஸகலதிவ்யதேசங்களின் நிலைமையே நன்கு மூதலித்துவிடுமாதலால் இந்த முழுப்பொய்யைப்பற்றி இங்கு நாம் யாதொன்றும் எழுதத்தேவையில்லை. உலக நிலைமை எவ்வளவுபுரண்டாலும் "அடியார்கள்வாழ அரங்க நகர்வாழ" என்கிற மங்களாசாஸநத்தின்மிடுக்கு ※ காருள்ளளவும் கடல்நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் செழிப்புற்றேயிருக்குமென்பது திண்ணம். இதுநிற்க.

நூதன பாத்ரம் ஜனித்ததானது தமிழ் க்ரந்தங்களுக்குத் தனியனாகவே யென்பது பிறருடைய பல நூல்களிலுள்ளது. தேசிகரே அப்படி வ்யவஸ்தை பண்ணி நியமித்தருளினார் என்றும் எழுதிவைத்திருக்கிறார்கள். இதில் நசமசா இல்லை. தேசிக சரித்திரம் யார் யார் எழுதிவைக்கிறார்களோ அவர்கள் யாவரும் இதுவே பாடமாகத்தான் எழுதிவருகிறார்கள். அணுவளவும் பேதமில்லை.

ஆகவே, ராமாநுஜதயா பாத்ரத்தை அங்கீகரிப்பவர்கள் யாவரும் தேசிக நியமனமாக மேற்கூறிய தனியன் வ்யவஸ்தையை ஒப்புக்கொண்டே தீர வேணுமென்பது சிலாலிகிதர்.

ஆக இவ்வளவால் என்ன தீர்ந்தது என்னில்; தமிழ்ப் பாஷையிலோ மணிப்ரவாள பாஷையிலோ தேசிக க்ரந்தங்கள் காணப்படுமாகில் அவற்றில் ஒரு தனியனும் இல்லாமலிருக்குமானால் விசாரமேயில்லை. முகப்பில் தனியன் எழுதப்பட்டிருந்து அது இவர்கள் சொல்லுகிற பாத்திரத்தனியனல்லாமல் ஸ்ரீமாந் வேங்கட தனியனாகவே காணும்பக்ஷத்தில் இவர்கள் எழுதியிருக்கின்ற கதையெல்லாம் கட்டுக்கதையே யென்று நிஷ்கர்ஷிக்க வேண்டுமெனத் தீர்ந்தது. இவ்வொரு விஷயத்தையே ஒவ்வொருவரும் நன்கு ஆலோசித்து உள்ளத்தை ஒரு நிலைப்படுத்திக் கொள்ளவேணும். அந்த க்ரந்தங்களைப் பிறர் கையால் ஓலையில் எழுதும் போது எவ்வண்ணம் எழுதியிருக்க வேண்டும்? சிலர் ஒரு தனியனையும் எழுதாமல் [ஸ்ரீரஸ்து இத்யாதிகளுங்கூட எழுதாமல்] க்ரந்தத்தையே தொடங்கி யெழுதுவதுண்டு. அப்படியும் சில ஓலை ஸ்ரீகோசங்கள் இருக்கின்றன. அவற்றைப்பற்றி நமக்கு விசாரமில்லை யென்று முன்னமே தெரிவித்தாயிற்று. அங்ஙனன்றிக்கே, தனியன் எழுதப்பட்டு ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: என்றே யிருந்து வேறொன்று அவற்றில் தலைகாட்டாதிருக்கப்பெற்ற ஓலை ஸ்ரீகோசங்கள் நூற்றுக்கணக்கில் கிடைக்குமானால் நாம் தீர்மானிக்கவேண்டியது என்ன? என்பதுதான் இங்குக் கேள்வி. இதற்கு உரியபதிலை அவரவர்கள் நெஞ்சிலேயே கொள்வது; அல்லது அருகிலுள்ள தம் தம் நண்பர்களிடம் தெரிவிப்பது. தெரிவித்துவிட்டு மேலேபார்க்க.

## இனி ஓலை ஸ்ரீகோச நிலைமை நிரூபணம்.

சென்னை எழும்பூரிலுள்ள கவர்ன்மெண்டு ஓரியண்டல்லைப்ரெரியில் அபாரமான ஓலை ஸ்ரீகோசங்கள் சேமித்துவைத்திருக்கிறார்களென்பது ப்ரஸித்தம். பொய்யாகவோ மெய்யாகவோ யார் யார் எங்கெங்கு எது எது எழுதிவைத்திருந்தார்களோ அதெல்லாம் பெரும்பாலும் அந்தலைப்ரெரியில் சேகரிக்கப்பட்டிருக்கிறது. அங்கு யார் சென்று எந்தப்புத்தகத்தைக் கேட்டாலும், பார்க்க உடனே நிராக்ஷேபமாக எடுத்துத்தருகிறார்கள். தேசிகர் அருளிய தமிழ்ப்பிரபந்தங்கள் ரஹஸ்யக்ரந்தங்கள் ஆகிய இவை அனேகம் பிரதிகள் அங்குக் காணக்கிடைக்கின்றன. அநாயாஸமாகச் சென்று காணலாம்.

"H. 13-4. நெம்பருள்ள ஓலைப்புத்தகம் தேவை"—என்று தெரிவித்தால் உடனே தேசிகப்பிரபந்த எட்டுப்பிரதி அழகாகக் கிடைக்கும். அதில் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: என்கிற ச்லோகம் பூர்த்தியாக எழுதப்பட்டு ப்ரபந்தாரம்பமுள்ளது காணலாம்.

| | |
|---|---|
| ப்ரதாந சதகம். | ரஹஸ்ய மாத்ருகா |
| பரமத பங்கம். | ரஹஸ்ய ரத்நாவளீ |
| ரஹஸ்ய சிகாமணி. | ரஹஸ்ய ஸந்தேசம் |
| ரஹஸ்ய நவநீதம். | ஸம்ப்ரதாய பரிசுத்தி |
| ரஹஸ்ய பதவீ. | ரஹஸ்ய த்ரயஸாரம் |

என்றிப்படிப் பலபல தேசிக க்ரந்தங்கள் தனித்தனிப் புத்தகமாக உள்ளன. இவற்றில் ஒவ்வொன்றிலும் ஸ்ரீமாந் வேங்கட தனியன் ஒன்றேயுள்ளது. நூதன பாத்ரத்தனியன் இவற்றில் இடம் பெறுததற்குக் காரணம் பிராமாணிகர்கள் அவசியம் நிரூபிக்க வேண்டும். தேசிகனுடைய நியமனத்திற்கு மாறாக அத்தனை ஓலை ஸ்ரீகோசங்கள் எழுதிவைத்தது யார்? முன்னம் அந்த லைப்ரெரிக்குச்சென்று, இதில் நாம் தெரிவித்திருக்கிறபடியே உள்ளதா இல்லையா என்பதைக்கண்டறிந்துகொண்டு பிறகு நிரூபணத்தில் கைவைக்கலாம். தேசிகனுடைய நியமனப்படி நூதனபாத்திரத் தனியனே ஏறியுள்ள தேசிக-தமிழ் க்ரந்த-ஓலை ஸ்ரீகோசங்களின் திரளைக் காட்டியன்றோ லைப்ரெரிஸ்ரீகோசங்களுக்கு அந்யதாஸித்தியை நீங்கள் கூறவேண்டும். அப்படிக்கூறவல்ல ஆண்புலிகளையன்றோ நாம் வரவேற்பது. என்றைக்கு வருவார்களோ?

## மற்றொரு முக்கியவிஷயம்.

ஸ்ரீதேசிகருடைய வைபவப்ரகாசிகையென்று ஒரு க்ரந்தம் அச்சிட்டிருக்கிறார்களல்லவா; இதில் தானே ராமாநுஜதயாபாத்ர விஷயமும் எழுதியிருக்கிறார்கள்; அதை மூலமாகக்கொண்டு தானே பின்புள்ளார்கள் இந்த பாத்திரவிஷயம் எழுதிவருகிறார்கள். அந்த வைபவப்ரகாசிகாக்ரந்தமும் மேற்குறித்த கவர்ன்மெண்டு லைப்ரெரியில் இருக்கின்றது. **"R. No. 104. H. 38—14"** என்று நம்பர் சொன்னால் அந்த ஓலைப்புத்தகத்தை உடனே யெடுத்துத் தருவார்கள். இன்றே சென்று காணலாம். அதில் இந்த பாத்ரத்தனியன் விஷயமான ப்ரஸ்தாவலேசமும் கிடையாது. இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாகத் தாமே கட்கூடாகக் காணலாமே.

இந்த ஓலைப்புத்தகத்திலும் கல்பனைக்கதைகள் சில உள்ளன வாகிலும் இந்த நூதனபாத்ரக் கல்பனைக்கதை இதில் புகவில்லை என்பதற்காகவே இதனை இங்கு எடுத்துரைத்தோம். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு கல்பனை ஏறி வருகிறதென்பதுதான் நன்கு விளங்குகின்றது.

இதே லைப்ரெரியில் ப்ரபந்த நிர்வாஹம் என்றொரு சுவடி [பத்தெட்டு ஏடு] உள்ளது. நாம் நேரில்பார்த்தோம். புதுமை இன்னமும் மாறவில்லை. இதன் உத்பத்திகாலத்தை அதிகமாக மதிப்பிட்டால் 50 வருஷம் மதிப்பிடலாம். இதிலுள்ள வார்த்தைகள் பெரும்பாலும் அநந்விதம். க்ரந்தமும் அபூர்ணம். இன்னது சொன்னார், இன்னது சொல்லப்போகிறார் என்பது தெரிவரிது. இஃதொன்றில் மாத்திரம் முகப்பில் நூதநபாத்ரச்லோகமுள்ளது. இங்ஙனே ஒன்றிரண்டு சுவடிகள் இவர்களுக்குக் கிடைப்பதாகவே கொள்வோம். இதுவரையில் நாம் செய்திருக்கும் கல்வெட்டான நிரூபணங்களை நன்கு நெஞ்சில்கொண்டு, இதையும் ஊன்றிப் பார்க்குமிடத்தில், "கல்பனையில் கைதேறினவர்கள்" என்பதுதான் விளங்கி நிற்கும். அதையே பரக்க நிரூபிக்கிறோம் மேன்மேலும்.

இந்த பாத்திரத்தனியன் எந்த க்ரந்தங்களுக்காக நியமிக்கப்பட்டதாய் இவர்கள் வெளியிட்டிருக்கிறார்களோ அந்த க்ரந்தங்களில் ஒன்றிலும் இல்லையென்பதை நாம் கீழே நிரூபித்ததற்குமாறாக லைப்ரெரியில் இருப்பதாய் ஒருவர் நிரூபிக்க முன்வந்தால் அதுவன்றோ நாம் கவனிக்கத்தக்கது. நூதன பாத்ரத்தனியனோடு கூடியதாகச் சில ஓலையேடுகளை இவர்கள் காட்டாவிடினும் காட்டினதாகவே வைத்துக்கொள்வோம். அந்தத் தனியன் இல்லாமலும் ஸ்ரீமாந் வேங்கடதனியனே உள்ளதாகவும் பொது ஸ்தலங்களில் காணப்படுகிற நூற்றுக்கணக்கான ஸ்ரீகோசங்கள் எப்படி அவதரித்தன என்பதைத் தினவடங்க நிரூபித்துவிட்டுப் பிறகல்லவோ வேறு பேச்சுக்கள் பேசவேண்டும். அந்த லைப்ரெரியிலேயே தென்னாசார்ய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலபலவுள்ளன. அவற்றில் "ஸ்ரீஶைலேஶ தயாபாத்ரம்—லக்ஷ்மணாத்மஜம் ..." என்கிற ஆரம்பம் இல்லாத ஓலை யேடுகள் மிகச்சிலவே. தனியன் புத்தகம் என்றும் வாழித்திரு நாமங்கள் என்றும் பலதொகுதிகள் லைப்ரெரிதோறும் இருக்கின்றன. அவற்றையும் கண்ணாரக்கண்டாலன்றோ தத்துவம் நெஞ்சிற் பதியும்.

## இனி, ஸ்ரீமாந் வேங்கடதனியனைத்தள்ளி நூதன பாத்ரத்தனியன் ஸ்ருஷ்டித்தது ஏன்? என்பதைப்பற்றின மருமத்தை வெளியிடுகிறோம்.

அருளிச்செயல் தொடங்கும்போது "விட்டுத்தொடங்குவது" என்பது பழைய ஸம்ப்ரதாயம். "பல்லாண்டு பல்லாண்டு" என்று தொடங்காமல் "பல்லாயிரத்தாண்டு" என்றே தொடங்குவார்கள். "திங்கள் மதிநிறைந்த" "சிறுத்தாம்பினால்" "நலமுடையவன் யவனவன்" "மாது பொருந்தியமார்பன்" என்றிப்படியே தொடங்குவது நாளைக்கும் வழக்கம். தனியனையும் ".ஸ்ரீசைலேஶ தயாபாத்ரம்" என்று தொடங்காமல் 'தயாபாத்ரம்' என்றுதான் தொடங்குவதாம். நாளைக்கும் தயாபாத்ரமென்றே தொடங்குகிற வழக்கத்தை வானமாமலை முதலானவிடங்களிற் காணலாம். எல்லாவிடங்களிலும் இப்படியேதான் தொடக்கம் நடந்துவந்தது. வேறொரு புதுத் தனியன் ஏற்பட்டுக் கலஹம் உண்டானபின்பே ஸ்ரீசைலேச தயாபாத்ரமென்றேதொடங்கவேண்டியதென்று வ்யவஸ்தையேற்பட்டது.

இங்ஙனன்றிக்கே தயாபாத்ரமென்றே தொடங்கிக்கொண்டிருந்தகாலத்தில் பிரதிபக்ஷிகள் அந்த கோஷ்டியிலே வந்து புகுர ஆரம்பித்தவர்களாதலால் தாங்கள் வேறு வாக்யமாகத் தொடங்கினால் "ப்ரதமகபளே மக்ஷிகாபாதঃ" என்னுமாபோலே ஆரம்பத்திலேயே தடை ஏற்பட்டுவிடும் என்று அஞ்சி ஆரம்பவாக்யம் ஒன்றாகவேயிருக்கவேண்டுதற்காகத் தாங்களும் தயாபாத்ரம் என்றே ஆரம்பிப்பதாய்க்காட்டிக்கொள்ள ராமாநுஜதயாபாத்ரத்தைக் கல்பனைசெய்து கொண்டார்கள். வ்யவஹாரங்களில் விசாரணை ஏற்பட்டபோதும் "தயாபாத்ரமென்றுதான் இருவகுப்பினரும் சேர்ந்து தொடங்குவதுவழக்கம்; தொடங்கியானபிறகு அவரவர்களுடைய ஆசார்ய விஷயமான தனியனை அவரவர்கள் ஸேவிப்பது வழக்கம்." என்று, வந்தேறிகள் சொல்லிக்கொள்ளவும் ஒரு ஸௌகர்யமேற்பட்டது. இப்படியல்லாமல் ஸ்ரீமாந்வேங்கட என்று தொடங்கினால் அதிகமான வேற்றுமை ஸ்பஷ்டமாக விளங்குவதால் சிரமம் ஏற்படும் என்று ஆலோசித்தே அதைக்கொண்டு தொடங்க விரும்பாமல்...... தயாபாத்ரமென்றே வைத்துக் கல்பனைசெய்தார்கள். ஸ்ரீஶப்தத்தை முன்னேவைத்தே ச்லோகம் தொடுக்கவேணுமென்று வெகு சிரமப்பட்டும் அது கூடவில்லை. என்? தயாபாத்ரம் என்கிற ஆநுபூர்வி அப்போது வரமாட்டேனென்கிறதே.

## ராமாநுஜா பாத்ரத்தைப்பற்றி யெழுதியுள்ள கதைகள் சிறிதும் பொருந்தாதவை யென்பதைப் பரக்க நிரூபித்தல்.

ஆரியர்காள்! "இரண்டு தனியன்களில் எதை நாங்கள் வைத்துக்கொள்வது?" என்று அக்காலத்திலேயே சிஷ்யர்கள் தேசிகரைக் கேட்டதாகவும் அதற்கு தேசிகர் ஏதோ வ்யவஸ்தைபண்ணித்தந்ததாகவும் எழுதினார்களே! அதை ஒழுங்காக எழுதிவைக்க அந்தோ! அறிந்திலர். * "ஸ்ரீமாந் வேங்கட தனியனை உபய வேதாந்த ரஹஸ்யார்த்த க்ரந்த காலக்ஷேபங்களுக்கு வைத்துக்கொள்ளுங்கோள்; * பாத்ரத்தனியனை ஸந்நிதிகளில் விவாதங்களுக்கு வைத்துக்கொள்ளுங்கோள்" என்று தேசிகர் நியமித்தருளினதாக எழுதிவைத்திருந்தால் எவ்வளவோ அழகாயிருந்திருக்குமே. அப்போது நாம் ஓலை ஸ்ரீகோஶ ஆராய்ச்சியை ப்ரஸ்தாவிக்கவே இடமிராதே. "தேசிகர் அங்ஙனம் நியமித்தார் என்பதை ஓலையேடுகளில் காட்டமுடியுமா?" என்கிற ஒரு கேள்வியோடே நின்றிருக்குமே. அதற்கு, ஒன்றிரண்டு ஏடுகளை இரண்டொருநாளில் ஸஜ்ஜப்படுத்திப் புராதனமாக்கிக் காட்டியும் விடலாமே இல்லாத வொருதனியனுக்கு, இல்லாதகதைகளைக்கட்டினதானது பொய்யை ஊர்ஜிதப்படுத்தியதேதவிர வேறொருபலனையும் ஸாதிக்கவில்லையே.

விவேகிகாள்! ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி தாம் பகவத்விஷயமதிகரித்தபோது நூதன பாத்ரத்தனியனைத் தாம் ஸூக்ஷ்மத்துத் தாம் அநுஸந்தித்ததாகவே யிருக்கட்டும்: 'எந்தத்தனியனை அநுஸந்திப்பது?' என்று தேசிகரிடம் சென்று சிஷ்யர்கள் கேட்கவேண்டியகாரணம் என்னோ? இங்ஙனம் கேட்டார்கள் என்கிற வார்த்தையே அசடுதட்டிக்கிடக்கவில்லையா? இரண்டுச்லோகங்களையும் சேர்த்தே அவர்கள் அநுஸந்தித்துக்கொண்டால் என்ன முழுகிப்போய்விடும்? ஸ்ரீராமாயணாதிகளில் வால்மீகிவந்தநாதிகளைப் பற்றிப் பல பல துதிகள் அநுஸந்தித்து வரவில்லையோ?

திருக்கச்சிநம்பிகளின் தேவராஜாஷ்டகத்திற்கு முன்னே இரண்டுஸ்துதிபத்யங்கள் அநுஸந்தித்து வரவில்லையோ? ஸ்தோத்ரரத்நத்திற்குமுன்னே * ஸ்வாதயந்நிஹ * நமோநமோ யாமுநாய * நமோயாமுந * என மூன்று அநுஸந்தித்து வரவில்லையோ? * அவிதிதவிஷயாந்தரঃ * வேறொன்றும் நானறியேன் * இத்யாதிகளும்

பலவுண்டே. இப்படியிருக்க, எந்தச்லோகத்தையநுஸந்திப்பது? என்கிற கேள்வியே அஸங்கதமாக இல்லையா? "எந்தத்தனியனை ப்ரதானமாக வைத்துக்கொள்வது?" என்று கேட்டார்கள் — என்று விடைகூறப்பார்க்கில், அப்போது தேசிகருடைய உத்தரம் அஸங்கதமாகுமே. முழுவதும் அவிசாரிதரமணீயமே. அதற்குமேல், பாத்ரத்தனியனை தேசிகர் மிகவும் கொண்டாடினர் என்பது ஹாஸ்யமாக இல்லையா? அவர்தாமே ஒரு நிபந்தனை பண்ணித்தந்தாரென்கை பரமஹாஸ்யமாக இல்லையா? அந்த நிபந்தனையின்படி ஒருவர்கூட நடத்தி வரவில்லையென்பது அவரவர்கள் வெளியிட்டிருக்கின்ற தனியன் புஸ்தகங்களாலும் லைப்ரெரிகளிலுள்ள ஓலைப் புஸ்தகங்களாலும் கல்வெட்டாகத் தேறிநின்றதே! இது யோசநீயமாக இல்லையா? உதாஹ்ருதபூர்வமான வேதாந்த தேசிகவைபவப்ரகாசிகையில் இந்த பாத்ரத்தனியனுடைய பேச்சே இல்லாமலிருப்பது எவ்வளவோ உண்மையைக் காட்டிவிடுகிறதே! ஒரு பொய்யிலிருந்து எத்தனை அநர்த்தங்கள் விளைகின்றன பாருங்கள்.

அன்றியும், தேசிகர் கொண்டாடும்படியான விசேஷம் இந்த நூதனபாத்திரத்தில் என்ன இருக்கிறது என்பதை மேதாவிகள் சிறிது விமர்சிக்கலாகாதா? ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: என்கிற பரமகம்பீரமான பத்யரத்நத்தைக் கேட்ட காதுகளுக்கு இந்த பாத்ரச்லோகம் எப்படியிருக்கிறது என்பதை அவரவர்தமுள்ளம் உணரமாட்டாதா? விலக்ஷணமான அந்தத்தனியனில் ப்ரஹ்மதந்திரஸ்வாமி அத்ருப்தியடைந்து வேறுதனியன்பணிக்க நினைத்தார் என்கிற வார்த்தையே அருவருக்கத்தக்கதாக இல்லையா? அவர் அங்ஙனம் பணிக்க நினைத்தது பரமார்த்தமாக இருந்தால் ஸ்ரீமாந் வேங்கடதனியனைப் பலபடியாலும் வென்றதாகவன்றோ புதுத்தனியன் பிறந்திருக்கும். தேசிகர் ஸ்வாசார்யரான அப்புள்ளாருக்கு அருளிச்செய்துள்ள ※ யஸ்மாதஸ்மாபிரேதத் யதிபதிகதித ப்ராக்தந ப்ரக்ரியோத்யத் ※ என்கிறச்லோகத்திற்குத் தோள்தீண்டியாகவன்றோ தோன்றியிருக்கவேணும். அப்படியில்லாமற்போனாலும் ※ ஸ்ரீமத்ராமாநுஜகுரு க்ருபா பாத்ர மாச்சர்ய சீலம் ※ என்றிப்புடைகளிலே சொல்நிரம்பவும் பொருள்நிரம்பவும் பணித்தாலன்றோ ஸ்ரீமாந் வேங்கடதனியனில் விஞ்சியதாக ஆகும். அதுவன்றோ தேசிகரும் உண்மையில் உகக்கும்படியானதாகும்.

தேசிகனுக்குண்டான ஆசார்ய கடாக்ஷப் பெருமையை ஸ்ரீமாந் வேங்கட தனியன் சிறிதும் காட்டவில்லை யென்றும் அந்தப் பெருமையைப் பேசுவதற்கென்றே நூதன தனியன் பிறந்ததென்றும் கூசாமல் எழுதிவைத்திருப்பது பொருந்தவேண்டுமானால், தேசிகர் அதிகரணஸாராவளியில் தம்மைப்பற்றி ஸாதித்துக்கொண்ட *ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாத்ஸாவித்யநுபயி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக்த்ருஷ்டே: * என்கிற ச்லோகத்தின் சாயையிலேயன்றோ அமைந்திருக்கவேண்டும். குறை தீர்க்கவந்த தனியன் அநுஷ்டுப்பாகவா பிறந்திருக்கும். பலகுறைகளுக்கு ஹேதுவுமாயிற்றே!.

அன்றியும், பகவத்விஷய காலக்ஷேபத்திற்காகவே இந்த பாத்ரத் தனியன் இடப்பட்டது என்கிறீர்களே; அப்படியானால், பகவத் விஷயத்தில் தேசிகருக்குள்ள அவகாஹநத்தையும் ஆற்றலையும் சிறிதாவது காட்டியல்லவோ இத்தனியன் பிறந்திருக்கவேணும். * இமவந்தம் தொடங்கி இருங்கடலளவும் பெருமேன்மை பெற்றுப் பொலிந்து வருகின்ற ஸ்ரீசைலேச தனியனுக்குப் போலியாயிருக்க வேணுமென்கிற எண்ணமே கொண்டு அதன் சாயலாகவே தொடுத்திருக்கின்ற படியைப் பார்க்கலாகாதா?

## ஸ்ரீசைலேச பாத்திரத்திற்குப் பிரதியாகவே ராமாநுஜாபாத்ரம் கல்பிக்கப்பட்டதென்பதைப் பரக்க நிரூபித்தல்.

"இதைப்பார்த்தே அது தொடுத்ததாகக் கொள்ளலாகாதோ?" என்று ஸஹஸா பிறர் பேசவுங்கூடும். அந்தோ! கேண்மின்; தேசிகருக்கு வேறொரு தனியன் இல்லாமலிருந்து இந்த பாத்திரத்தனியனென்றே யிருந்திருக்குமாகில், இதுதானும் திவ்யதேசங்களிலும் க்ரந்தகாலக்ஷேபாதி பரம்பரையிலும் வீறு பெற்று மிருக்குமாகில் இதைப்பார்த்தே ஸ்ரீசைலேஶ தனியன் தொடுத்தது என்று நாமே ஸித்தாந்தம் செய்யத் தடை யிராது கிடீர். கீர்த்தி மூர்த்தியான பெங்களூர். (வடகலை) தூப்புல் வெங்கடாசாரியரென்பவர் ஸகல ஸ்தோத்ரங்களையும் ஒன்று சேர்த்துப் பதிப்பித்த போது ஸ்ரீதேசிகஸ்தோத்ரங்களின் தலையில் ஸ்ரீமாந் வேங்கட தனியனைப் பதிப்பித்து; ஸ்ரீவரவரமுநி தத்ஶிஷ்யஸ்தோத்ரங்களின் தலைமேல் * ஸ்ரீமாந் ஸ்ரீரங்கநாதார்ய: வேதாந்தத்வய கேஸரீ, முநி: காந்தோபயந்தா மே

ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி,* என்றொரு ச்லோகத்தைப் பதிப்பித்தார். அதைக்கண்டு மற்றுஞ்சிலரும் அங்ஙனே பதிப்பித்தார்கள். இந்தச்லோகத்தைச் சிலர் சிந்தனை செய்யவும் தொடங்கினார்கள். இது போலித்தனியன் என்பதை நிரூபித்து நாமே இதன் ப்ரசாரத்தை நிரோதித்திருக்கிறோம். எந்த விஷயத்திலும் நிஷ்பக்ஷபாதமாகவே நாம் ப்ராமாணிகார்த்த ப்ரதிஷ்டாபநம் செய்வோம்.

* ஊஹாரிஹ வரவரஊநிவரவஸக்தீவஸாயுாஷூாஓ ஊஓிதஹாஜூம்ீ। ஓிவூம் யஊாஹ ஊம்த்ரூம் ஸஸவுஊஞூாநு விஜிதூ ஹாவிஹாதி॥ நிவிமாவூவுாஊஓதிுஃ நிதூம் யநூஞூநிஸஊநாதூஷிூ। ஹஜதெ, வரவரஊநிவரஜெ வதஊம்த்ரூாயஊஷூா ஜெ ஜவூஃ॥

*என்கிறபடியே எஞ்ஞான்றுமெங்குமொழிவற நீங்காத செல்வம் நிறைந்து விளங்காநின்ற வெற்றித் தனியனைப் போலித்தனியனுக்கப் பாடுபடுவதெல்லாம் அதற்குள்ள பெருமையை ப்ரதிஷ்டாபநம் செய்வதிலேயே பர்யவஸித்து நிற்கும். வேதத்தில் ஓரோவிடங்களில் * தாநுஜெவா நவஸா ஸஜயநு தெஜெவாஃ வராஜிஹ்யா நாஃ* *கநீயாமஸொ ஜெவாகூவநு ஹஊயாமஸொ வொஸரா:* என வரும்போது பரமைகாந்திகளுக்குக் குரல்தழுத்துத் தலைகுனிய நிற்க நேருமாபோலே சில திவ்யதேசங்களில் சிலநாளாக நேர்ந்திருக்கும் நெறிதவறுன நிலைமை இன்புறுமிவ்விளையாட்டுடையானுடைய லீலைகளிலே ஒன்று என்றே கருதத்தக்கது. அந்தச்சில ஆலயங்களில் நூதன பாத்ரத் தனியன் வந்தேறின நாளை ஒருநொடிப்பொழுதில் கண்டுபிடிக்கக் குறையில்லையன்றோ? எவ்வுள்கிடந்தான்ஸந்நிதியில் ஸ்ரீமத் அஹோபிலம் ஸ்வாமிகள் ஸ்ரீசைலேசத்தனியனைத் தொடங்கிவந்த முறைமையை மாறுபடுத்த ஆரம்பித்ததும் அதற்காக அவர்க்கு நேர்ந்த கஷ்டங்களுமெல்லாம் நாளைக்கும் ரிகாரட்டுகளில் அழிந்திலவே. அவையும் வெளிவரக் காண்பீர்கள்.

ஸ்ரீமாங்வேங்கட தனியனிருக்க, பாத்ரத்தனியன் எதுக்காகப் பிறந்தது? என்கிறகேள்விக்கு இவர்கள் தெரிவிக்கிற உத்தரமானது, *நவநீத பாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யா:* என்கிற கேள்விக்கு *மாதஃ! கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும்* என்று களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வனளித்த விடையை வென்றதே!.

எதற்குப் போட்டியாக எது கல்பிதம் என்பதை இன்னமும் எளிதாகவும் அவிசால்யமாகவும் நன்கு நிலைநாட்டிவிடுகிறேன். இந்த பாத்ரத்தனியனோடு கூட [உத்தர சாந்தியென்கிற வாழித் திருநாம ப்ரகரணத்தில்] தேசிகருடைய ஆசார்யரான அப்புள்ளார்க்கும் ஒருதனியன் ஏற்பட்டிருக்கிறது. [அதாவது நமோ ராமாநுஜார்யாய என்பது.] மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளைக்குத் தனியனாக அநுஸந்திக்கப்பட்டு வருகின்ற நம: ஸ்ரீசைலநாதாய என்கிற ச்லோகத்திற்குப் பிரதியாகத் தோன்றினது இது. அந்த ச்லோகம் கைங்கர்ய சாலிநே என்று முடிவாகிறது. இந்த ச்லோகம் குணசாலிநே என்று முடிவாகிறது. நம: என்கிறதைப் பார்த்து நம: என்பது; வந்தே என்பதைப் பார்த்து வந்தே என்பது; இப்படியாகவே ஒரு ஸ்ருஷ்டி ஏற்பட்டிருக்கிறது. பிராமாணிகர்காள்! இங்கு ஆராய்ச்சி செய்மின். அப்புள்ளாருக்கு இந்தத்தனியன் உண்மைதானா? அவருக்கு தேசிகனருளிச்செய்த தனியன் யஸ்மாதஸ்மாபி: இத்யாதியாய் ஆச்சர்யமான பெரியச்லோகமே உண்மையானது. எந்த க்ரந்த பரம்பரையிலும் அதுதான் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றதென்பது நிர்விவாதம். அப்படிப்பட்ட அற்புதமான தனியனை விட்டு வேறான இந்த அநுஷ்டுப்பை தேசிகரே ஸாதித்தார் என்கிறார்களே; எதற்காக இதை அவர் ஸாதிக்கவேணும்? "நம: ஸ்ரீசைலநாதாய என்பதைப்போலவே அநுஷ்டுப்பாகவே நம் ஆசார்யருக்கும் இருக்கவேணும்" என்று கருதியா ஸாதித்தார்? ஸ்ரீமாந்வேங்கட தனியனிலுண்டான குறையைத் தீர்ப்பதற்காகப் பாத்ரத்தனியன் பிறந்தது என்றாற்போலே, யஸ்மாதஸ்மாபி: என்று தாமே முன்பு ஸாதித்த தனியனிலுண்டான குறையைத் தீர்ப்பதற்காகத் தாமே இந்த அநுஷ்டுப்பு ஸாதித்தார் என்று சொல்லித்தீரவேண்டுமே? அது என்ன குறை?

"உலகுக்கெல்லாம் ஆசார்யரான நம்முடைய தனியன்களே அநுஷ்டுப்பாயிருக்கும்போது வெறுமனே சாஸ்த்ரார்த்தமாக நமக்குவாய்த்த குருவுக்கு ப்ரஹ்மாண்டமான தனியன் ச்லோகம் எதுக்கு" என்று தேசிகரே திருவுள்ளம்பற்றி முந்தின பெரிய தனியனை மறுத்து இந்தச் சிறிய தனியனையருளினார்—என்று சொல்லி வருகிறார்களே, அதையே எல்லீரும் ஆமோதிக்கிறீர்களா? அப்படியானால் அந்தப் பெரிய தனியன் தள்ளுண்டிருக்க வேணுமே; அங்ஙனில்லையே. போட்டியாக கோஷிப்பதற்கு மாத்திரமேயன்றோ

இந்த அநுஷ்டுப்பை ஆதரித்து வருகிறீர்கள். இது அடியோடு எந்த ஏட்டிலும் ஏறவுமில்லையே. திருவாய் மொழிப்பிள்ளைக்கு நம: ஸ்ரீசைலநாதாய என்பது தவிர வேறு தனியன் எங்கும் இல்லாமலிருப்பதையும் சேர்த்து இவ்விஷயங்களை ஆராய்ந்து பார்க்கலாகாதா.

அடுத்தபடியாக மற்றொரு விநோதமும் கேண்மின். வடமொழித் தனியன்களின் செய்தி இதுவாயிற்று. இனித் தென்மொழிவாழித் திருநாமங்களில் புகுந்து பார்ப்போம்.

**A.** வாழி திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால்வாழும்
**B.** வாழியிராமானுசப்பிள்ளான் மாதகவால்வாழும்

(இவை உபய வெண்பாக்களின் ஆரம்பம்.)

**A.** தேறும்படியுரைக்கும் சீர்,
**B.** தேறும்படியுரைக்கும் சீர்.

(அந்த வெண்பாக்களுக்கு இருவருடைய முடிவும் இதுவே.) காப்பியடித்தது யார்? என்பதைக் கண்டுபிடிக்கும்வழி கேண்மின்.

“தேறும்படி மாறன் மறைப்பொருளை மணவாள மாமுனிவன் உரைக்கும் சீர் வாழி” என்கின்றது முந்தின வெண்பா. “தேறும்படி மாறன் மறையும் இராமானுசன்பாஷ்யமும் நிகமாந்த குரு உரைக்கும் சீர் வாழி” என்கிறது பிந்தின வெண்பா. தேறும்படி என்கிற வாசகம் இரண்டிலுமுள்ளது. அதற்கு என்ன பொருள் தெரியுமோ? ‘கடைத் தேறும்படி’ என்று பொருள். யார் கடைத் தேறும்படி? என்று ஆகாங்க்ஷை யுண்டாகியே தீரும். எழுவாய் அவசியம் வேண்டும். முந்தின வெண்பாவில் “மாநிலத்தோர் தேறும்படி” என்று நன்றாக இருக்கையாலே ஆகாங்க்ஷை சாந்தமாகிறது. பிந்தின வெண்பாவைப்பற்றி இனி நாம் சொல்லவேண்டுமோ?

“எழுவாய் இல்லாவிட்டாலென்ன? அர்த்தஸித்திக்கமாட்டாதோ? இதுவொருவிஷயமா?” என்று பிறர் இலேசாகச் சொல்லிவிடக்கூடும். மத்யஸ்தரான தமிழ்ப்புலவரிடத்திலே இரண்டு வெண்பாவையும் தந்து, “எந்த வாக்கு ஸ்வரஸமாக அவதரித்தது? எந்தவாக்கு பிரதியாகத் தோன்றினது? சொல்லவேணும்” என்று கேட்டால் அப்போதன்றோ இந்த நமது நிரூபணத்தின் சுவை புலனாகும். சூதுகளை மருமத்தில் கண்டு பிடிக்கவல்ல

ஆராய்ச்சியாளர் உலகில் இல்லாமற் போகவில்லை. இரண்டு வெண் பாக்களிலும் இலக்கணப்படி சீர்பிரித்துப் பாருங்கள்; முந்தினதில் [வாழி—திருவாய்—மொழிப்பிள்ளை—மாதகவால், வாழும்—மண வாள—மாமுனிவன்] என்று அழகாகச் சீர்பிரிகிறது. பிந்தின தில், [வாழி—யிராமா—னுசப்பிள்ளான்,...வாழு—மணிநிக—மாந் தகுரு] என்று சீர்பிரிகிறது. 'எப்படிப் பிரிந்தாலென்ன? இதுவொருகுற்றமோ? வெண்டளை பிறழவில்லையே' என்பீர்கள். னுசப் பிள்ளான் என்றும், மாந்தகுரு என்றும் உடையும்படி வெண்பாவா கவே வைத்துப் பாடவேண்டிய அவசியம் யாது கொல்? வேறு விருத்தத்தில் செவிக்கினிதாகப் பாடியிருக்கலாகாதோ? முந்தினது [மாமுனிகளின் விஷயமானது] வெண்பாவாகவே யிருந்தபடியால் அந்தஸ்தானத்தில் வேறுவிருத்தம் இயற்ற இயலவில்லை என்று தானே உண்மையான பதில் வரவேண்டும். நிற்க.

முடிவில் அநுஸந்திக்கப்படுகிற அடியார்கள் வாழ அரங்க நகர்வாழ என்கிற வெண்பாவுக்குப் பிரதியாக இவர்கள் சொல்லு கிற நானிலமுந்தான்வாழ என்கிற வெண்பாவிலும் ஆராய்ச்சிக்கு விஷயம் வேண்டியபடியுள்ளது. இவை ஸ்ரீரங்கத்தில் அவதரித் தனவென்றே இருவகுப்பினரும் எழுதிவைத்துள்ளார்கள். இதற் குப் பொருந்தவும், -ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம் வர்த்தய* என்ற வடமொழி வாழ்த்துக்குப் பொருந்தவும் ஸ்ரீரங்க ஸாம்ராஜ்யத்திற்கு வாழ்த்துப் பாட வேண்டியது ப்ராப்தம். அப் டியே அரங்கநகர்வாழ என்று முந்தின வெண்பாவிலுள்ளது. பிந் தின வெண்பாவில் ஒரு ஊரைப்பற்றியும் பேசாமலேயிருந்து விட் டால் கேள்வியேயில்லை. அரங்கநகர்வாழ என்றதைப் பார்த்து நாமும் ஒரு நகர்ப்பதம் போட்டுவைப்போ மென்றெண்ணியல் லவோ (பிந்தின வெண்பாவில்) மாநகரில் என்று போட்டு வைத்தார் கள். இதற்கு என்ன அர்த்தம். அநர்த்தமே அர்த்தம் போலும். மாநகர் என்று ஒரு ஊர் இல்லை. ஆனால் ஸம்ப்ரதாயத்தில் தென் திருப்பேரைக்கு மாநகர் என்று ப்ரஸித்தியுண்டு. "தென் திருப்பே ரையில் மாநகரே" என்கிற திருவாய்மொழியும் "மாநகரிலே கோ ஷிக்கும்" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தியும் முதலியன இதில் பிரமாணம். அந்தத் திருப்பதியை உட்கொண்டா இந்த வெண்பா பிறந்தது? விவேகிகாள்! நீங்களே பொருள்பணிமின்.

'அரங்கநகர்வாழ' என்று ஏற்கனவே பாசுரம் அவதரித்திருந்த படியால் அவ்விதமாகவே தாங்களும் பாசுரம் கூட்டக் கூசி எதுகை நோக்கி ஏதோவொன்று பேசிவைத்தார்கள்—என்பதுதான் தத்துவமாகத் தேறும்.

மாமுனிகளின் வாழியின் தொடக்கத்தில் "மாறன் திருவாய்மொழிப் பொருளை" என்று [பிரகரணாநுகுணமாக] திருவாய்மொழியை மாத்திரம் எடுத்ததற்குச் சேர, முடிவு வெண்பாவிலும் ⁕ சடகோபன் தண்டமிழ்நூல்வாழ⁕ என்று திருவாய்மொழிக்கு மாத்திரமே வாழி கூறியிருப்பது மிக்க பொருத்தம். பிரதியான வாழியின் தொடக்கத்தில் "மாறன் மறையுமிராமானுசன் பாஷியமும்" என்று ஸ்ரீபாஷ்யத்தையும் சேர்த்து எடுத்ததற்கு இணங்க முடிவு வெண்பாவிலும் "மாநகரில் மாறன் மறையும் பாஷியமும் வாழ" என்றிருக்கவேண்டுமே. இல்லையே. "இப்படி என்ன நிர்ப்பந்தம்?" என்கிற க்ஷேபோக்தியினால் வெற்றிபெறலாமென்கிற எண்ணம் மாத்திரம் வேண்டா. வெண்பா அவ்வளவுக்கு இடம் தரவில்லை என்னுங்கோள். வெண்பாவாகவேயிருக்கவேணுமென்று என்ன அவசியம்? மாமுனிகளுக்காக அவதரித்தது வெண்பாவாக இருக்கிறபடியால் [அந்த கோஷ்டியில் கலந்து வேற்றுமை காட்டாமல் உபாம்ஶுவாய் ஸேவிப்பதற்குப்பாங்காக] எங்களுக்கும் வெண்பாவே அமையவேண்டியதாயிற்று — என்று சொல்லித்தீரவேண்டியது தவிர வேறென்ன வுத்தரமுள்ளது.

அநுஷ்டுப்புக்களின் ஸ்தானத்திலே அநுஷ்டுப்புக்களும், தயாபாத்ரம்—வந்தே—நமः—சாலிநே என்கிற பதவிந்யாஸங்கள் மாறாதபடி அப்படியப்படியே அவைகளும், வெண்பாக்களுக்கு வெண்பாக்களும், ஆசிரியத்திற்கு ஆசிரியமும், தேறும்படியுரைக்குஞ்சீருக்குத் தேறும்படியுரைக்குஞ்சீரும் ஆகவிப்படிமாறும்படியுரைக்குஞ்சீர் சிறிதுமின்றித் தொடுக்கப்பட்டிருக்கிற போக்கையும், திவ்ய தேசங்களின் திவ்ய சரித்திரங்களையும், ஓலை ஸ்ரீகோசங்களின் ஒழுங்குகளையும், நம்முடைய பல நன்னிரூபணங்களையும் ஒன்று சேர்த்து விவேகிக்க இவ்வுலகில் அதிகாரிகளில்லையா? 600 வருஷமென்று வாய்திறக்க இன்னமுமா கூசாதிருக்கின்றீர்கள்? நன்று நன்று. 600 வருஷம் ஆனது மெய்யே யென்பதை உலகமுகந்து கொள்ளுமாறு, வசைமொழிகள் சிறிதுமின்றி ப்ராமாணிகமாக ஒவ்வொன்றுக்கும் உத்தரமுரைத்து, மறுவாய்திறக்க வழியில்லாமே

க்ரந்தமுகேந ஸ்தாபனம் செய்துவிட்டுப் பிறகன்றோ பிறிதொன்றிற் புகவேண்டும். அச்ருதிமபிநீய என்றிருப்பதோ முறைமை?

ஸ்ரீசைலேசதயா பாத்ரதத்தைப் பார்த்து 'பாத்ரமென்கிற பதத்தோடுகூடியே திவ்யப்ரபந்தாரம்பத்தனியன் இருக்க வேண்டும் போலும்' என்று க்ரஹித்து எத்தனை பாத்ரத்தனியன்களைக் கல்பித்திருக்கிறார்கள் தெரியுமோ? அஹோபிலமடத்து ஸ்ரீஆதிவண்சடகோபஸ்வாமிதனியன் இன்னதென்பது உலகப்ரஸித்தம். அதாவது ப்ரபத்யே நிரவத்யாநாம் என்கிற ச்லோகமே. இந்தத்தனியனையே ஸமாச்ரயண பரம்பரைகளிலும் க்ரந்த பரம்பரைகளிலும் நாளைக்கும் மடத்தார் ஸேவித்து வருகிறார்கள். தனியன் புத்தகங்களிலும் இதைத்தான் வெளியிட்டுள்ளார்கள். இவர்கள் ராமாநுஜதயாபாத்ரத்தனியனை இழுத்துப் போட்டுக்கொள்ள ஆரம்பித்தபோது* கேசவார்யக்ருபா பாத்ரம்* என்று, தங்கள் ஸ்வாமியின் தனியனாக இன்னொரு பாத்ரத்தனியனையும் இயற்றிக்கொண்டார்கள். இவ்விரண்டு பாத்ரங்களில் எந்த பாத்ரத்தை முன்னே சொல்லுகிறது என்று சச்சரவு உண்டாகி, நாளைக்கும் சச்சரவிலேயே இருந்து வருகிறது.

மடத்து க்ரமங்களில் முதலில் ஸ்ரீசைலேசதயாபாத்ரமே தொடங்கி வந்ததையும், பிறகு ராமநுஜா பாத்ரம் தொடங்கிவந்ததையும், பிறகு அதை அடியோடு தள்ளினதையும், பிறகு [ஸயூத்யர்களோடு ஸந்தி பண்ணிக்கொள்ளவேண்டி] அதை மடத்துஸ்வாமியின் கேசவார்யக்ருபா பாத்ரத்திற்குப் பின்னாலே சேர்த்துக்கொண்டதையும், இன்னமும் ஒரு நியதியின்றிக்கே யிருந்து வருவதையும் அறியாதாருண்டோ? மடத்தாருடைய தனியன்கள்ஸம்பந்தமான அச்சுப் புத்தகங்களை யெல்லாம் ஒன்று சேர்த்து ஊன்றி நோக்கினால் வெகு விஷயங்கள் விசதமாகும். ராமாநுஜதயா பாத்ராதிகள் அடியோடு நுழையப்பெறாத புத்தகங்களையும், அவற்றை முன்னேயிட்டுப் பின்னால் மடத்துத்தனியன்கள் இட்ட புத்தகங்களையும், கேசவார்யக்ருபா பாத்ரத்தை முன்னே போட்டுப் பின்னை ராமாநுஜா பாத்ரம் போட்ட புத்தகங்களையும் (இனிவரப்போகிற விலக்ஷணப்ரகார புத்தகங்களையும்) கண்ணாரக் கண்டு இப்படிப்பட்ட வித்யாஸங்கள் ஏற்படக்காரணம் யாது? என்று விமர்சித்தால், திருவெவ்வுளூர் தேவஸ்தான ரிகார்ட்டுகளையும் சேர்த்துப் பராமர்சித்தால் நல்ல தெளிவு உண்டாகியே தீரும்.

*லக்ஷ்மீநாத ஸமாரம்பமாய் நாதயாமுநமத்யமமாய் ஸ்ரீராமாநுஜ பர்யந்தமான குரு பரம்பரைக்கு இவர்கள் தொன்று தொட்டு அநுஸந்தித்து வருகிற [*ஸ்ரீஸ்தநாபரணம்..............(இத்யாதி)யோநித்யமச்யுத*] தனியன்களையும் மாற்றிக்கொள்ள நிச்சயித்தவர்கள் என்பது ஸத்ஸம்ப்ரதாய முக்தாவளி யென்கிற ஸ்ரீஸந்நிதி குருபரம்பரையின் திருத்தமான பதிப்பினால் தெளிவாகிறது. "அந்தத்தனியன்களை யெல்லாம் நாங்கள் மாற்றிக்கொண்டு வெகுகாலமாயிற்றே" என்று ஸாதிக்கிற மஹான்களும் பலருளர். இந்த விஷயவிரிவினுட் புகுந்தால் பெரிய பாரதமாகும்.

மடத்துஸ்வாமிக்கு க்ரமமாக ஏற்பட்டிருக்கிற தனியன் வேறு; இவர்கள் புதிதாகச் சொல்லிவருகிற பாத்ரத்தனியன் வேறு—என்பதை மாத்திரம் மத்யஸ்தர்கள் திண்ணிதாக நெஞ்சிற்கொள்ளக் குறையில்லையே. இதில் வாய்திறக்கவும் வழியில்லையே. ஸந்நிதிகளில் இயல் தொடங்கும்போது ராமாநுஜாபாத்ரமே முந்துறச் சொல்லித் தொடங்கவேணுமென்று பகவதாஜ்ஞையும் ஆசார்ய நியமனமும் ஆனதாக ஒருசாரார் எழுதியிருப்பது உண்மையாகில், இப்போது ராமாநுஜாபாத்ராபிமானிகளாகக் காண்கிற மடத்தாரும் அந்தக் கட்டளையைப் பரிபாலித்து வரவேண்டாவா? ராமாநுஜாபாத்ரம் சொல்லியான பிறகல்லவோ கேசவார்யக்ருபா பாத்ரம் பேசவேணும். அப்படி எங்கேனும் காண்பதுண்டோ? அதை இவர்கள் பின்னால் தள்ளியிருப்பது கொண்டே அது பின்னால் வந்தேறினதென்பது குன்றிலிட்ட விளக்காக விளங்கவில்லையா?

இவையெல்லாவற்றிற்கும் சிகரமாக ஒரு விஷயம் கேண்மினோ: இப்போது ராமாநுஜாபாத்ரத்தைப்பற்றியிருப்பவர்கள் உடையவர்க்கும் நம்மாழ்வார்க்கும் ஸகலபரம்பரைகளிலும் அநுஸந்தித்து வருகிற தனியன்கள் எவை? என்று பாருங்கள். இவர்களுக்கு யோநித்யமச்யுத என்பதும் கிடையாது; மாதாபிதாயுவதய: என்பதும் கிடையாது. உண்டென்று பொய் சொல்வதற்கும் வரமாட்டார்கள். ப்ரணும்ய லக்ஷ்மணமுநி: என்பதையே உடையவர் தனியனாகவும், யஸ்ய ஸாரஸ்வத ஸ்ரோத: என்பதையே நம்மாழ்வார் தனியனாகவும் நியமேந ஓதியும் ஓதுவித்தும் வருகிறார்கள். அப்படிப்பட்டவிவர்களுக்கு, அந்தத்தனியன்களைத் தள்ளி அவற்றின் ஸ்தானத்திலே—தென்கலையார்களே நியமேந அநுஸந்தித்து வருகிற *யோநித்யம், மாதாபிதா* தனியன்கள் விவாஹவேளைகளில் மாத்திரம் எப்

படி வந்து புகுந்தன? யார் நியமித்து இவற்றைப் பற்றினார்களிவர்கள். வஸ்துதஸ்து, இத்தனியன்களில் தங்களுக்கு விரோதம் தோன்றுமையாலே இவற்றை மாற்றிக்கொள்ள நினைத்திலர் என்றும், விரோதமுள்ள தனியன்களிலே விச்வாமித்ரஸ்ருஷ்டிகளை யதேஷ்டமாகப் பண்ணிக்கொண்டார்களென்றும் சொல்லித்தீரவேண்டியது தவிர வேறு வழியில்லைகிடீர். வழியுண்டேல் விளம்பலாமே.

இங்ஙனே ஒவ்வொரு விஷயத்தையும் விமர்சிக்கப்புகுந்ததனால் விச்வாமித்ரஸ்ருஷ்டியாளர்கள் நம்கையிலே சிக்கனப்பிடியுண்டார்கள். பெரியாண்டவனுக்கு * நமஸ்தஸ்மை ஸ்ரீநிவாஸ லக்ஷ்மண * *தேசிகேந்த்ரதயாபாத்ரம்;—சின்னாண்டவனுக்கு* நமஸ்தஸ்மை ஸ்ரீநிவாஸமஹா * ஸ்ரீஸ்ரீநிவாஸயோகீந்த்ரதயாபாத்ரம் * குட்டியாண்டவனுக்கு * நமஃஸ்ரீபாதுகாஸேவி * ஸ்ரீநிவாஸதயாபாத்ரம் — என்றிப்படி நமஃ பாத்ர வாழி மயமாகவே நிறைத்துவைத்து வெளியிட்டிருக்கிற ஆக்கூராண்டவன் போல்வாருடைய தனியன் புத்தகங்களைக் கண்டால், இவ்வகுப்பினர்க்கு அஹோராத்ரம் பாத்ர ஸ்ருஷ்டியல்லது பணியில்லையென்பது கைகொள் கனியாகுமே.

இத்தகைய விஷயங்களை ஒரு விவேகி நடு நிலையில் நின்று சிறிது ஆராய்ந்தால் போதுமே. சே! சே!! இவ்வளவு சோத்தலா! இவ்வளவு புழுத்தலா! என்று நெஞ்சில் படாமலா போகும்? கட்டாயம் பட்டே தீரும். அங்ஙனம் பட்டபின்பும் பிடிவாதமாய் ஒரு காரியம் செய்வது மஹான்களுக்கு மதிப்போ? வாஸ்தவமாக இது உண்மையான தனியனாக இருந்தாலுங்கூட இது தான் புகுமிடங்களில் பெரும்பாலுமடைந்துவரும் நிலைமையை நோக்கி உபேக்ஷையாயிருக்கவன்றோ அடுப்பது. "இதுவே நமக்கு அஸாதாரணமான தனியன்" என்று கூசாமல் எழுத எங்ஙனம் கைவந்ததோ? கிம் நாம தஸ்ய ஸாதாரணத்வம்? என்று கேட்டால் வாய்திறக்கவுண்டோ வழி?

நம்மாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசார்யர்களின் தனியன்கள் உலகமெங்கும் எவ்வளவோ சிறப்புற்று வருகின்றனவே; அவை என்றைக்கு அவதரித்தன என்பதுபற்றி ஒருவராவது ஒரு சொல்லாவது எழுதிவைத்திருப்பதுண்டோ? ஸ்வாமி தேசிகனும் அநுஸந்தித்த அந்தத் தனியன்களுக்கு உத்ஸவம் என்கிற வார்த்தை எங்கேனு முண்டோ? தனியனுக்கு உத்ஸவம் என்கிற வார்த்தையே மிக விசித்திரமாக இல்லையா? அதி

னும் இந்தச்லோகத்திற்கு உத்ஸவம் என்கிற வார்த்தை என்னே! * வெள்கிப்போய்த் தம்முள்ளே தாம் விலவறச் சிரித்திடாரோ?

"ஒரு மூலையிலே கதவடைத்துக்கொண்டு நாம் சிலர் ஏதோ நடத்திக் கொண்டால் இவனுக்கு வந்ததென்ன?" என்கிறார்களாம் சில மஹான்கள். எண்ணினபடி உத்ஸவத்தை எவ்வளவும் பெருகப் பண்ணுக அம்பரமே தண்ணீரே சோறே அறம செய்க. இச் செயல்களெல்லாம் நல்லனவேயென்பதில் யார்க்கு என்ன விப்ரதிபத்தி? அயதார்த்தமான வார்த்தைகளால் உலகைவஞ்சிக்க நினைத்ததற்காக மாத்திரமே நாம் இதில் ப்ரவர்த்தித்து உண்மைப்பொருள்களை உலகுக்கு உணர்த்தலானோம். இவர்களுடைய பாத்திரத் தனியனில் ராமாநுஜ சப்தார்த்தமான [தேசிகருக்கு ஆசார்யரான] இராமாநுசப்புள்ளானுக்கு எங்கும் விக்ரஹமில்லை. அதையாவது ப்ரதிஷ்டிப்பித்து அந்த மஹானுக்குத் திருநாள் நடத்தினாலாவது தேசிகருள்ளம் குளிரும். கிம்பஹுநா? அவரவர்கள் விருப்பத்தின்படி எதையாவது செய்துகொள்க. அதில் உபதேசம் செய்யவேண்டிய கடமை நமக்கில்லை. நம்முடைய கர்த்தவ்யம் எவ்வளவோ அவ்வளவில் நாம் நிற்கிறோம்.

இந்த பாத்திரத்தனியன் சரித்திரமும் வியாக்கியானமும் கொண்டபுத்தகம் வெளிவரப்போகின்றதாமே. வியாக்கியானம் வேணுமானால், வையமெல்லாம் விஸ்மிதமாகவும் கல்லும் கரையவும் விபுலதமமாக நாமே யெழுதித்தருவோம். சரித்திரம் வெளிவருமென்கிறார்களே, அதைப்பார்க்கத்தான் * நாளேலறியேனென்று பாரித்துக் கிடப்புதோம். அதற்கு எப்படித்தான் பிராணப்ரதிஷ்டை பண்ணுகிறார்களோ, அவ்வதிசயத்தைக் கண்ணுடையார் காணவேணும்.

## ஸ்ரீமான். வி. வி ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமியின் வியாஸத்தின் ஆராய்ச்சி.

22—7—38உ வெளிவந்த சுதேசமித்திரனில் வி. வி. ஸ்ரீ. ஸ்வாமிகள் எழுதியிருக்கும் வியாஸத்தில் "வடகலையார்கள் திவ்யப்ரபந்தங்களில் நிராதரவு காட்டிவருகிறார்கள்" என்றும் "தென்கலையார்கள் வேதசாஸ்திரங்களில் நிராதரவு காட்டிவருகிறார்கள்" என்றும் தம்முடைய இரண்டு பரிதாபங்களை வெளிப்படுத்தியுள்ளார். இவற்றுள், வடகலையாரைப்பற்றின பரிதாப விஷயமாக முன்னமே நாம் சிறிது எழுதியாயிற்று.

திவ்யப்ரபந்தங்களில் மிகவும் ரஸமிருக்கின்றதென்றும், அவற்றைத் தம் வகுப்பினர் நிராதரவு செய்திருப்பது மிக்க பரிதாபாஸ்பத மென்றும் ஏதோ பகவத்கடாக்ஷ விசேஷத்தால் இப்போதாக அறிந்துகொள்ள பாக்கியம் பெற்ற இந்த மஹான், அந்த திவ்யப்ரபந்தங்களுக்கு ப்ராப்தமான தனியன் ஸ்ரீசைலேசதயாபாத்ரமே யென்பதையும், அந்தத் தனியனேயே பரம்பரையாக ஆதரித்துவந்த குடும்பங்களுக்கு அதில் நிராதரவு உண்டானதுமுதலாகவே பரிதாபாஸ்பத நிலைமை நேரிட்டது என்பதையும் பகவத் கடாக்ஷத்தால றிந்து பிறர்க்கும் உபதேசிக்கும்படியான பாக்கியத்தையும் விரைவில் பெறுவார் என்று பெரியோர்கள் நம்புகின்றார்கள். *ஏதாவதீம் கமயிது: பதவீம் தயாளோ: சேஷாய்வலேஶநயநே க இவாதிஹாஸ:? * என்கிற தேசிக திவ்யஸூக்தியின் அநுஸந்தான ஃலமாகவும் இப்பேறுகிடைக்கும். இது நிற்க.

மித்திரனில் இந்தமஹான் காட்டியுள்ள இரண்டாவதான [தென்கலையார் விஷயமான] பரிதாபத்தைப்பற்றி இங்குச்சிறிது எழுதவிரும்புகிறோம். தென்கலையார் வேதசாஸ்த்ரங்களில் நிராதரவுகாட்டிவருவதாக இவர் பரிதபிக்கிறார். இதில் 'வேதசாஸ்த்ரங்களில்' என்கிற வாசகத்திற்கு 'வேதங்களாகிற சாஸ்த்ரங்களில்' என்று பொருள்விவக்ஷிதமோ? அல்லது 'வேதங்களிலும் தர்க்க வ்யாகரணாதிசாஸ்த்ரங்களிலும்' என்று பொருள்விவக்ஷிதமோ? — இரண்டுபடியும் விவக்ஷிதமேயென்றுகொண்டே விடையளிப்போம்.

"தெளியாத மறைநிலங்கள்" என்று வேதாந்ததேசிகனே அருளிச்செய்யப்பெற்ற வேதத்தில் அவ்வளவாக ஆதரம்கொள்ளாமற் போனாலும் குற்றமில்லை. தேசிகன் அபிவாதநத்தில் யஜுச்சாகாத்யாயீ என்பதை நீக்கி த்ராவிட ப்ரஹ்ம ஸம்ஹிதாத்யாயீ என்று சொல்லிவந்ததாக மூன்று நான்கு மாதங்களுக்குமுன் வேதாந்த தீபிகையே வெளியிட்டிருப்பது ப்ரஸித்தம். கீதையில் *த்ரைகுண்யவிஷயா வேதா:* என்றிருக்கிறபடியாலும், உத்தமாச்ரமிகள் ஸம்ந்யஸிக்கும்போது வேதத்தையே முந்துற முன்னம் ஸந்ந்யஸித்து வேதபாராயணத்தைத் தாம் விலக்கிக் கொள்வது ப்ரத்யக்ஷமாயிருக்கையாலும், வேதபாரங்கதரான வேதாந்த தேசிகர் "சந்தமிகுதமிழ்மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்தகுரு" என்று தமிழ்மறையையிட்டே தம்மை நிரூபித்துக்கொண்டபடியாலும் வேதம் உபாதேயமன்று என்று வாதிப்பவர்கள் எமது கோஷ்டியில் இருப்பதாகத் தெரியவில்லை.

* 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑍇𑌤𑌵𑍍𑌯𑌃 * என்கிற விதிக்குக் கட்டுப்பட்டு வேதாத்யயநம் செய்யவேண்டுமென்கிற நியமத்தை நாங்கள் தொன்றுதொட்டுப் பரிபாலித்து வருமவர்களே. ஆனால் ஒன்றுண்டு. வெறும் வேதத்தைமாத்திரம் ஓதினால் * 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌯𑌂 𑌭𑌾𑌰𑌹𑌾𑌰𑌃 𑌕𑌿𑌲𑌾𑌭𑍂𑌤𑍍 * 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌾𑌃 * குங்குமம் சுமந்த கழுதையோபாதி * என்கிற சாஸ்த்ரீய நிந்தைகளுக்கு இலக்காக வேண்டிவருகிறது. அந்த நிந்தையில் தப்பிப்பிழைப்பதற்காக, ஸாங்க வேதாத்யயநம் பண்ணி உபநிஷத்துக்களும் ஓதி 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿களும் அதிகரித்து ப்ரஹ்மவித்துக்களாகவேணும். * 𑌅𑌨𑌨𑍍𑌤𑌪𑌾𑌰𑌂 𑌬𑌹𑍁𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌶𑍍𑌚 𑌕𑌾𑌲𑍋 𑌬𑌹𑌵𑌶𑍍𑌚 𑌵𑌿𑌘𑍍𑌨𑌾𑌃। 𑌯𑌤𑍍𑌸𑌾𑌰𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 * என்ற பிரமாணத்தை நம் தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் உபக்ரமத்திலேயே (இரண்டாவது அதிகாரத்தில்) எடுத்துக்காட்டி "வேதத்தில் பூர்வபாகத்தில் ஐஹிகபல ஸாதநப்ரதிபாதகமான ப்ரதேசம் அத்யல்ப ஸாரமாகையாலே அநுபாதேயம்." என்று நிஷ்கர்ஷித்து, அதிலேயே "அமையாவிவை...... சுமையான கல்விகள் சூழவந்தாலும்" என்கிற தமது பாசுரத்தையும் * சாகாநாமுபரி ஸ்திதேந * என்கிற தமது ச்லோகரத்நத்தையும் ஆச்சரியமாக அருளிச்செய்தும் போந்திருக்கையாலே தேசிக திவ்ய ஸூக்திகளை உண்மையில் சிரஸாவஹிக்கும் எம் வகுப்பினர் நிஷ்க்ருஷ்ட ஸாரநிஷ்டர்களாக இருந்துவருகிறார்களென்றால் இதில் ஒரு மஹான் பரிதாபம் காட்டுவது பாங்கோ? * 𑌸𑌾𑌰𑌜𑍍𑌞𑍋 𑌯𑌦𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑌸𑍍𑌤𑌿 𑌭𑍁𑌵𑌨𑍇 𑌨𑌾𑌥𑌸𑍍𑌸 𑌏𑌵𑌾𑌸𑍍𑌯 𑌨𑌃 * என்று நம் தேசிகனால் குலபதிகளாகக் கொண்டாடப்படுகின்ற வகுப்பினர் யாவர் என்பதைச் சிறிதேனும் விவேகிக்கவேண்டாவோ? தேசிகஸூக்திரஸமறிவாரார்?

பெரியதிருமொழி வியாக்கியானத்தில் (5—8—7ல்) "முற்படத்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளுமதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப்போலே" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்கிறார். எல்லாரும் நம்பிள்ளையைப்போல் அவதாரபுருஷர்களாக இருக்கமுடியுமா?. "சொல்லார் தமிழொருமூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவுந்தெரிந்தவன்" எனப்பட்ட எம்பெருமானாரைப்போலவாவது, அவருடைய புநரவதார பூதரான மணவாளமாமுனிகளைப் போலாவது, ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரராய் கவிதார்க்கிகஸிம்ஹமான நம் தேசிகரைப்போலவாவது எல்லாரும் இருக்கமுடியுமோ? காலத்

திற்கும் சக்திக்கும் தக்கவாறு அதிகரிக்கவேண்டியதாகின்றது. "ப்ராஹ்மண்யத்திற்காட்டிலும் ஸ்ரீவைஷ்ணவத்வமே சிறந்தது என்றும், இதுவே முக்கியமாக ரக்ஷித்துக்கொள்ள வுரியது" என்றும் நம் தேசிகன் முதலானோருடைய நிஷ்கர்ஷம் தெரியவருகையாலே, கர்மகாண்டங்களிலே உசிதமான பரிச்ரமமும், ப்ரஹ்மகாண்டஸாரமான அருளிச் செயலிலே அவகாஹநாதிஶயமும் கொள்வது ஸ்ரீவைஷ்ணவஸந்தானத்தில் பரம்பராப்ராப்தமாக இருந்து வருகிறது. யாவஜ்ஜீவமும் வேதமொன்றிலேயே போதுபோக்கி வருகின்ற பிறரைப்போலே நாமிருப்பதில்லையென்பது உண்மையே.

"ஸவ்யுத: கரவீராதீநு ஸமேதெ ஸாமஸெவநா। ஜதவஸம் ஜீவிநீ யத்ர ஜதமாணவஸாமதா॥" என்று ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஸ்வாமி அருளிச்செய்கிற கணக்கிலே, தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்த வகுப்பிலே ஜநஸங்க்யையே மிகக்குறைவு என்பது ப்ரஸித்தம் அதற்குத்தக்கபடியே வேதபாரங்கதர்கள் உசிதஸங்க்யையில் இருந்துவருகிறார்கள். சுஷ்கவேதத்தை மாத்திரம் ஓதி ஸ வைப்ராஹ்மண கார்த்தப:. என்கிற விருதைப்பெற்றிருப்பார் எமது வகுப்பில் தேறமாட்டார்களென்பது உண்மையே. வேதாத்யயநம் பண்ணி அருளிச்செயலும் ஓதிமுடித்தவர்களே இங்குப் பெரும்பாலும் ஸேவை ஸாதிப்பர்கள். வேதநிந்தைகநிரதர்களும் இங்கில்லை, திவ்யப்ரபந்த தூஷகர்களுமிங்கில்லை. வேதத்தை இடக்கண்ணாகவும் அருளிச்செயலை வலக்கண்ணாகவும் கொண்டு காண்கிறோம்யாம்.

வி. வி. ஸ்ரீ. ஸ்வாமி வித்யாபக்ஷபாதியென்று மிகவும் ப்ரஸித்தி பெற்றிருக்கிறார். (1) உபயவேதங்களையும் ஒருங்கே பரீக்ஷை கொடுப்பவர்களுக்கும் (2) அர்த்தத்தோடும் அப்பரீக்ஷைகொடுப்பவர்களுக்கும் பரிசளிப்பதாக இன்றே ப்ரகடனம் செய்தருளி, தாம் நடத்த நினைத்திருக்கும் யாத்ரோத்ஸவகாலத்திலேயே பரீக்ஷையையும் பிரகாசமாக நடத்தட்டும். பரீக்ஷ்யர்களாக எந்தவகுப்பு ஸ்ரீவைஷ்ணவர்கள் எத்தனைவர் எழுந்தருள்கிறார்களென்பதைக்காணலாம்.

இனி சாஸ்த்ரவிஷயத்திற் சொல்லுகின்றேன். சாஸ்த்ரங்களில் நிராதரவு செய்கிறார்களென்பது அர்த்தமில்லாத வார்த்தை. இவர் ஸ்வகீய ஸம்ப்ரதாயத்தில் எவரெவர்களை சாஸ்த்ரஜ்ஞர்களாகப் பாவித்திருக்கின்றாரோ அவர்கள் பெரும்பாலும் தென்கலை வித்வான்களையடிபணிந்து வாசித்து அவர்களுடைய யோக்யதைகளில் ஶதாம்ஶம் பெற்றவர்கள். ஸ்ரீகபிஸ்தலம் ஸ்வாமி, ஜகத்ப்ரஸித்தரான திருப்பதி புரிசைஸ்வாமி ஸந்நிதியில் வாசித்தவர்; இஞ்சிமேடு

ஸ்வாமியும் அப்படியே. கோஷ்டீபுரம் ஸ்வாமி ஸ்ரீரங்கம் எம்பார் ஸ்வாமி ஸந்நிதியில் வாசித்தவர்; கிம் பஹுநா? திருப்புட்குழி ஸ்வாமி ஸ்ரீமத் கோயில்கந்தாடையண்ணன் ஜடப்ரோல் ஸ்வாமி ஸந்நிதியில் வேதாங்கம் பலவும் பயின்று அவரையே பரமதெய்வமாகக் கொண்டிருந்தவர். இங்ஙனமே ஆங்காங்குக் கண்டு கொள்ளலாம்.

தம்மைச்சுற்றிப் பற்றி வாழ்கிற சில அக்ஷராஸ்யர்களைத் தாம் பெரிய சாஸ்த்ரஜ்ஞர்களாகக் கருதியிருக்கின்றார்போலும். தாராளமாகக் கருதுக. ஒரு சிறிய விஷயத்தினால் இங்கு நல்தெளிவு பிறப்பிக்கின்றேன்.

நிகழும் ஆடிமாதத்தில் வெளிவந்த வேதாந்த தீபிகையில் (பக்கம் **166**ல்) ஸ்தோத்ரம் என்கிற வட சொல்லைப்பற்றின வ்யுத்பத்தியை இந்த வி. வி. ஸ்ரீ. ஸ்வாமி வெளியிட்டிருக்கக் காண்கிறோம். ஸம்ஸ்க்ருத பதத்தின் வ்யுத்பத்தியைப்பற்றிப் பேசுவதற்கு ஸம்ஸ்க்ருத ஶாஸ்த்ரங்களில் பரிசயம் அவசியம் வேண்டுமென்பது நிர்விவாதம். அஃதில்லாதவர்கள் பேசினாலும் எழுதினாலும் தாம் விச்வஸித்திருக்கிற சாஸ்த்ரஜ்ஞர்களிடம் கேட்டுணர்ந்ததாகவே அர்த்தமாகும். இனி இவ்விஷயத்தைச் சிறிது சோதிப்போம்.

"ஸ்துதி என்கிற சொல்லுக்கும் ஸ்தோத்ரம் என்கிற சொல்லுக்கும் அர்த்தபேதமுண்டு" என்று முந்துற எழுதுகிறார். இந்த வார்த்தை இதுகாறும் ஸம்ஸ்க்ருத நாட்டில் கேட்டதில்லை; இங்கு விலை செல்லக்கூடியதுமன்று. அமரகோசத்தில் *ஸ்தவ: ஸ்தோத்ரம் ஸ்துதிர் நுதி:.* என்றிருப்பது ஸுப்ரஸித்தம். துதித்தல் என்பதுதான் இரண்டுக்கும் பொருள். அர்த்தபேதம் கிடையாது.

ஸ்தோத்ரம் என்கிற சொல்லில் இரண்டு தாதுக்கள் சேர்ந்திருப்பதாகவும் (அதாவது) ஸ்தோதாரம் த்ராயதே இதி ஸ்தோத்ரம் என்று வ்யுத்பத்தியாகவும் எழுதப்பட்டிருக்கிறது. பாணிநீயத்தில் கூருஉஞ ப்ரக்ரியையில் * தாமீஶஸயுயுஜஸ்துதுதஸிஸிசமிஹபததஶநஹ: கரணே * என்கிற ஸூத்ரத்தினால் ஷ்டுதாதுவின்மேல் கரணாயெஷ்ட்ரந் ப்ரத்யயம் வந்து ஸ்தோத்ரம் என்கிற சொல் நிஷ்பந்நமாகின்றதென்பது சாஸ்த்ரீயமாக அறியவேண்டிய வழி. ஒரே தாதுதான்; இரண்டு தாது இல்லை.

மந்த்ரம் என்கிற சொல்லுக்கு மநநாத் த்ராயதே என்று நம் பூருவாசாரியர்கள் வ்யுத்பத்தி காட்டுவது வாஸ்தவமே. *மத்ரி — குப்தபரிபாஷணே* என்கிற தாதுவின்மேல் வருஞமாக மந்த்ர:

என்பது தேறுகின்றதென்பது வையாகரணர்களின் வழி. அந்த வழியான வ்யுத்பத்தியையும் நம் ஆசார்யர்கள் ஆதரித்தேயுள்ளார் கள். ஸ்தோதாரம் த்ராயதே இதி ஸ்தோத்ரம் என்று எந்த சாஸ்த் ரஜ்ஞர் அல்லது எந்த ஆசார்யர் வ்யுக்பத்திபண்ணியிருக்கிறரென் பது தெரியவேணும். சாஸ்த்ரவித்துக்கள் பண்ணியிரார்கள்.

ஊஊ வ்ஸ்ய வநீ—ஊஊ ராணீ என்று ஒரு வித்வான் சொல்லக் கேட்டிருந்தவர் "ஸ்க்ருவஸ்ய பத்நீ—ஸ்க்ருவாணீ" என்றூராம். நேத்ரம் கோத்ரம், பாத்ரம், ஸூத்ரம், சாஸ்த்ரம், வேத்ரம், மூத்ரம் என்கிற வட சொற்களுக்கெல்லாம் இனி வ்யுத்பத்தி வெளிவரும் போலும்.

ஸஹஸ்ரநாமாத்யாயத்தில் * ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய: ஸ்தோத்ரம் என்று எம்பெருமானுக்கு ஸ்தோத்ரமென்றே ஒரு திருநாமமுள்ளது. இங்கு ஸ்தோதாரம்த்ராயதே என்று வ்யுத்பத்திபண்ணினால் பொருள் நன்கு பொருந்தக்கூடியதாயிருந்தும, ஸ்ரீமத் சங்கராசார்யரும் அங்ஙனேபண்ணவில்லை, பட்டரும் செய்தருளவில்லை. யாரேனும் ஒருமஹான் பண்ணியிருந்தால் அது வொருவழி என்னலாமேதவிர, அது கொண்டு "ஸ்துதியென்கிற சொல்லுக்கும் ஸ்தோத்ரமென்கிற சொல்லுக்கும் அர்த்த பேதமுண்டு" என்றும் "இவ்விருபதங்களுள் இருக்கும் வித்யாஸத்தைக் கவனித்து அர்த்த வித்யாஸத்துடன் உபயோகிப்பதே உசிதமாகும்" என்றும் எழுத எமது சாஸ்த்ரஜ்ஞர்கள் அனுமதிக்க மாட்டார்கள். வேதாந்ததீபிகைக்கு எத்தனையோ சாஸ்த்ரஜ்ஞர்கள் ஆசிரியர்களாகக் குழுமியிருக்கிறூர்களே; மற்றும் ஆங்காங்கு அநேக சாஸ்த்ரஜ்ஞர்கள் ஊன்றிக் கடாக்ஷித்து வருகிறூர்களே; * நத்யூத மேதத்கிதவ! க்ரீடநம் நிசிதைச் சரை:. * என்று சகுனிக்குப்பாண்டவர்கள் தட்டியுணர்த்தினது போல் உணர்த்தவல்லார் ஆரேனு முளரோ? சாஸ்த்ரார்த்தங்களை இவர்க்கு இப்படியெல்லாம் சிக்ஷித்துத்தருகிற சாஸ்த்ரஜ்ஞமணிகள் எமது கோஷ்டியில் இல்லைதான். இவர் எது செய்தாலும் எது எழுதினாலும் உகந்து கொள்ளும்படியான சாஸ்த்ரஜ்ஞான பரிபூர்த்தி நமக்கு வாய்க்கவில்லையே! என் செய்வோம். இதுநிற்க.

நிகமநம். புராதனமான விஷயங்களை நிர்த்தாரணம் செய்வதற்குப் புராதன நூல்களே உதவும். ப்ரக்ருத பாத்ர த்தனியன் விஷயத்தை எந்த நூல்கொண்டு நிர்த்தாரணம் செய்கிறூர்களென்பதையே மத்யஸ்தர்கள் தெரிந்து கொள்ளவேணும். ஸ்ரீ உவே. சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் தாமெழுதிய தேசிக சரித்திரத்தில்

(பக்கம் 129ல்) "தேசிகசரித்திரத்தைப்பற்றி நாலைந்து புராதன நூல்கள் இருப்பதாயும், அவையெல்லாம் பரஸ்பரவிருத்தங்களாக வே யிருப்பதாயும், அவற்றை அவலம்பித்துப் பின்புள்ளார் பலர் எழுதியிருக்கும் நூல்களும் விமர்சமில்லாமலும் மாறுதலாகவும் தேசிக ஸ்ரீஸூக்திவிருத்தமாகவும் இருப்பதாயும்" ஸ்பஷ்டமாக எழுதிவெளியிட்டிருப்பதை யாவரும் காணலாம். இதனால், பிரா சீனர்களோடு நவீனர்களோடு வாசியற அனைவரும் இவ்விஷயத்தில் பிரமாணத்திற்குக் கட்டுப்படாமல் ஸ்வச்சந்தமாகவே பொய் எழுதி வைத்தவர்கள் என்பது நன்கு வெளியாகிறது. அந்தஸ்வாமி தீர் மானிக்கிறபடி மிகவும் அப்ராமாணிகமான விஷயங்களையே நூதன பாத்ரிகள் எழுதிவைத்திருக்கிறார்கள் என்னும் விஷயமே அடியே னால் ப்ரமாணயுக்திகளோடு பரக்க நிரூபிக்கப்பட்டது. உலகுக்கு உண்மைதெரிவதற்காகவே இது வெளியிடலாயிற்று.

ஸ்ரீஉவே. சேட்லூர்ஸ்வாமியின்ஸ்மரணம் இங்கு அர்த்தாத் உண்டானபடியாலும், ப்ரக்ருத பாத்ரோத்ஸவத்தைக் குறையற நடத்திவைக்க அந்தஸ்வாமியும் எழுந்தருளப்போகிறதாக வேதாந்த தீபிகையில் விளம்பரம் செய்திருப்பதாலும் அடியேன் செய்யும் விண்ணப்பமொன்று கேளீர்.

இந்தஸ்வாமி ஏற்கனவேயெழுதி வெளியிட்ட நூல்களில் சாஸ் த்ரவிரோதங்கள் பலபல காணப்பட்டபடியால் அவற்றை நன்கு நிரூ பித்து அடியேன் பலநூல்கள் வெளியிட்டிருக்கிறேன். ஒன்றுக்கும் இதுகாறும் உத்தரம் வெளிவரவில்லை. ஸம்ப்ரதாயார்த்தவிஷயமான விசாரம் கடக்க நிற்க. அதைப்பற்றின பேச்சேவேண்டா. ஸர்வ பண்டித ஸாதாரணமான வியாகரணம் மீமாம்ஸை முதலிய சாஸ்த்ர ஸம்பந்தமான நிரூபணங்களை அடியேன் விரிவாகக்காட்டி, அந்த சேட்லூர்ஸ்வாமியின் எழுதல்கள் மிகவும் விபரீதமென்பதை ருஜுப் படுத்தியிருப்பது உலகமெங்கும் பரவியதே. அவ்விஷயங்களுக்குத் தக்க ஸமாதானங்களை அந்தஸ்வாமி வெளியிடுவாரானால் அவரி டத்தில் சக்ராங்கனம் செய்துகொள்ள ஸித்தனாயிருக்கிறேனென் றும், அவர் திருநெற்றியிலுள்ள புண்ட்ரத்தையே இட்டுக்கொள்ளு கிறேனென்றும், அவருடைய பாதுகைகளையே சிரஸா வஹித்து வீதியாரவரக்கடவேனென்றும் அடியேனுடைய நூலில் (பக்கம் 23, 24 களில்) ப்ரதிஜ்ஞைகள் செய்து ஸ்ரீமுகஸுபு மார்கழி மாதத்தில் வெளியிட்டிருக்கிறேன். அவ்விதமாக அடியேனை ஆட்படுத்திக் கொள்ள அந்தஸ்வாமிக்குத் திருவுள்ள முண்டாக வில்லையே!.

அந்த சாஸ்த்ரார்த்தவிசாரங்களை, இங்கு எழுந்தருளப்போகிற வித்வச்சிகாமணிகள் ப்ராமாணிகமான முறையிலே செய்தருளி க்ரந்தமாக்கி உண்மையான சாஸ்த்ரஜ்ஞர் இன்னாரென்பதை உலகுக்கு வெளியிட்டால் நன்றாம். இதுவன்றோ சாஸ்த்ரஜ்ஞக்ருத்யம்.

[illegible]

**பெருமாள்கோயில் பிரதிவாதி பயங்கரம்**
**அண்ணங்கராசாரியரியற்றிய நூல்களில்**
**நூற்றைம்பதாவது க்ரந்தமாகிய**
**பாத்ரதத்வ விஜயத்வஜம்**
**முற்றிற்று.**

காமகோடி பிரஸ், காஞ்சிபுரம். [பக்கம் 247 முதல் 274 வரையில்.]